"பொருணின்ற பெற்றியைப் பொய் யின் றுணர்தல், மருளறு நன்ஞான மாண்பு", "எட்டு வகையுறுப்பிற் றுகி யியன்றது, கட்டிய நற்காட்சி காண்" (அருங்கலச். ருஎ, கஈ) என்பவற்று லுணர்க. நல்லொழுக்கம்: அனுவிரதம், மஹாவிரதமென இருவகைப்படும்; அவற்றுள், முன்னையது இல்லறத்தார்க் கும் ஏனையது துறவறத்தார்க்குமுரி யனவாமென்றும் ஒவ்வொன்றும் மிகப் பலவாமென்றும் கூறுவர்; இரத்தி னத்திரயம் பரத்திரயமெனவும் வழங் கும்; "பரத்திர யங்கள் பணித்தபி ரான்" (திருநூற். உச.) இவை திரி யோகமருந்தெனவும் வழங்கும் (நீல. தரும. கO.) பவ்வியசீவன்- முத்தியில் விருப்பமுள்ள ஆன்மா.

376. (ஈ) நுகர்ச்சியிலுலகம், "பண் டுகண் டேயறி யாப்பொருள்" (திரு நூற். உ) என வழங்கப்படும்.

377. (உ) ஆக்கத்திற்குக்காரணமா னமையின் மக்கள்யாக்கை, 'அமிர்து' எனப்பட்டது.

378. (உரை) தரிசனமோகனீயப் பிரகிருதி, அநந்தாநுபந்திக் குரோத முதலியவை; அகூஉ - ஆம் பக்கம் பார்க்க.

379. (உ) குழவிப் பருவமாகிய நாற்று; காளைப்பருவமாகிய கதிர்; பாகவதம், ஈ: அ, ஈரு-ஆம் பாடல் இக்கவியுடன் ஒப்புநோக்கற் பாலது.

380. (உரை) கலை: சிலேடை. பொன்னெயில் வட்டத்தினிலக்கண த்தை, திருநூற்றந்தாதி, கஅ-ஆம் பாட லாலுணர்க. பிரபுலிங்கலீலை, வச வண்ணர்கதி, கரு-ம் செய்யுளின் கற் றுங்கே அறிதற்பாலது. சாது - சரியன். இதன் ஈ-ஆம்அடி, "தவ முந்தவமுடையார்க் காகும்" (குறள், உசுஉ) என்பதைத் தழுவியது.

381. இரத்தினத்திரயங்கள் முறை யே இதில் நிலைமுதலியனவாக உருவ கிக்கப்பெற்றன.

382. (க) "நல்லறங்காக்க வென் றுள்" (386.) சரணம் - பாதுகாப்பு.

383. (உரை) தம்பிமார்-நபுலவிபுல ரும் நந்தட்டனும். தோழன்மார் - ஐஞ் ஞூற்று நால்வர். இவர்கள், சீவகனு டன் கல்விபயின்றவர்கள்.

384. (உ - ஈ) அசோகமரத்தின் கீழுள்ள பீடத்திலிருத்தல், சாரணபர மேஷ்டிகளுக்குரிய விதியென்பர்; சிலப். கO: உக - ரு; ஷை ஷை கசுO - சுஈ.

385. (ஈ) தேர்ந்து: "ஆம்புடை தெரிந்து வேந்தறிவெனுமமைச்சன் சொன்னான்" என்றார் முன்னும்; 232.

389. (க) கண்ணன் கர்ணனுக்கு ப்பிறப்புணர்த்தியது, பாரதம், கண் ணன் றூதுச்சருக்கம், உகஅ - ஆம்பா டல் முதலியவற்றாலும், ஸ்ரீபுராணத் தில் உஉ-ஆம் புராணத்தாலும் அறி யலாகும்.

⁂392. (க) இளம்பிராயத்திற்பகையை வெல்லத் தொடங்கினமையின், சீவக னுக்குச் சிங்கக்குட்டி உவமமாயிற்று; (364, 404); பொருநராற்றுப்படை யில், கஈகூ-ஆம் அடிமுதலியவை இங் கே அறியற்பாலன.

393. (உரை) தன்பகையைக்கொல்ல ஒருவன்சேறலைவிலக்குதற்குஅரசகுலத் திற்பிறந்தவர் அஞ்சுவர்; 'ஒருவருடம் பொறுத்திருத்தலைக்குரு தக்ஷிணையாக எனக்குக்கொடு' என்று ஆசிரியன் சீவகனை இரந்தானென்றும், முற் பிறப்பில், அன்னக்குஞ்சைத் தாய் தந்தையினின்றும் பிரித்தநாள், கசு- ஆதலின், சீவகன், தாய் முதலியவர் களை, கசு - வருடம்பிரியும்படி நேர்ந்த தென்றும் வடநூல்கூறுகிறதென்பர்.

394. (க - உ): 2830 - 31; (நீல. தரும. கஎ-உரை.) நெருப்பிற் பழுக்கக்காய்ந்த இரும்புண்ட நீர் அவ்விரும்புள் அடங்கியிருப்பதுபோல இரத்தினத்திரயங்கள் சீவகனிடம் அடங்கியிருத்தலையறிந்து.

395.(உரை) வெள்ளிமலை-வித்தியாதரர்க்கு இருப்பிடமென்றுகூறப்படும் வெள்ளிமலை; அதில் தக்ஷிணஸ்ரேணி, உத்தரஸ்ரேணியென இரண்டுள்ளன; முதலாவதில் ருO - பட்டணங்களும், இரண்டாவதில் சுO - பட்டணங்களுமுள்ளனவாம்: **மேருமந்தர புராண** த்தாலறிக.

396. (உரை) யானைத்தீநோய்: 'வேழவெந்தீ' (401); 'தணியாப்பசி', 'விளிவில்வெம்பசி' என்று **மணிமேகலையி**ற் கூறப்படும். மாடம் ஈடு (= திரள்) அகமெனப் பிரிக்க.

398. (ங) 871.

399. இடைகழி-'ரேழி';"புழைவாயிற் போகிடைகழி" **பட்டினப்**. கசச.

400. (ச) "ஆசைமாக்களொடந்தணர்கொள்கென" (911); "உடற்குள் வந்தெழு மொள்ளழல் போன்று பின், கிடைத்தி லாப்பொருண் மேற்கிளர்ந் தோடியே, நடக்கு மாசையை நண்ணு முவப்பினு, லடக்கு மந்தணரே யறிவாளரால்" **பாகவதம்,** அ:எ, சசு.

402. (உ)"நான்முகன்":நன்னூல் விருத்தியுரையில் "பூமலி யசோகின்", "முச்சக நிழற்றும்" என்னுங் கடவுள் வாழ்த்துக்களின் விசேடவுரைகள் இங்கே அறியற்பாலன. கருமங்கெட்ட பின்பு அருகனுக்கு உண்டாகும் அதிசயங்கள் பத்தனுள் சதுராননத்துவம் ஒன்றென்பர்.

403. (க) அதகம்-அகதம்; எழுத்து நிலைமாறல்; "எரிதழல் விடத்தை, மலைமறை யதகமாற்றியாங்கு" (கல். "நிணமுயிருண்ட".)(உரை)பொன்றக் கெட்டது-முற்றக்கெட்டது.

405. (உ)'தந்தைநீயாகி' என்றுரன், ஞானபிதாவாதலின்.

406.(ச)மணிவண்ணன்-திருமால்.

409. (உ)வீரன்-ஸ்ரீவர்த்தமானர்; "வீரன்பிண்டியே" என்பர்பின்; 3012.சமவசரணம் அவருடையதாள் நிழலாகக்கூறப்படும்; "அறிவனடிக்கீழ்" 27.

410. (க) நம்பன்-சீவகன். நாகம்-பவணலோகம். (ச) வெம்புதல்-விரும்புதல்; "வெம்புஞ் சுடரிற் சுடருந்திருமூர்த்தி" 2.

411. (ங) அகலிய - அகன்ற. (உரை) சீவகன் வீணையில் மிக்க பயிற்சியுள்ளவனென்பதை, "வீணைக்கிழவன்"(28),"வீணைவித்தகன்"(1002), "வீணைவேந்து" (2598) என்பனவற்றாலுணர்க.வீற்றுத்தெய்வம்: (**சிலப்.** உ: சுகூ-எO; அடியார்.) வீரமகள் - வீரலக்ஷ்மி. மாதங்கி - ஸங்கீதத்தின் அதிதேவதை; 550.

413. (ங) கன்று உள்ளி- கன்றை

415. (ங) புள் - ஈண்டு ஆந்தை; 450-ஆம் கவியுரையைப்பார்க்க.

416. (ச) சுடுவில் - சுடுதலால்.

415-7. மிதிலையிலிருந்து புறப்பட்டபொழுது தசரதருக்கு ஒருகணி நிமித்தஞ்சொன்னதாகத் தெரிகிறது; **கம்ப.** பரசிராம. சு.

418. (க) மூசுதல் அருத.(உரை) முருகக்கடவுள், குறிஞ்சிநிலத்திற்குத் தெய்வம்.

419. (க) கோங்கமலர்கள், பொன்னிற முடையவை.

420. (ச) முள்குதல் - முயங்கல்; "செவ்வாய் பயந்ததேன் பருகிமுள் குஞ்சிலைவலாய்" 687, "கண்ணினெழுதிமுள்குமொய்ம்பன்" (1413), "முள்கப் பூம்பட்டழித்து" (1986) என்பவற்றாலுணர்க். புது மணவாளப்பிள்ளைகள் போருக்குச்செல்லுதல் மரபன்றென்பர்.

422. (ங) பள்ளி -இங்கே இடைச்சேரி; "பள்ளி யாகுல மாக" 426.

425. (க) 'எம்மனைமார்' என்றது கன்றுகளை; அண்மை விளி. (மு) **முல்லை.** கஉ - சு.

426. (ச) சேறு-தேன்; இதனடியாக வந்த பெயர் சேறையென்பது.

427. (ச) 'இறையணிகேட்க' என்றதனால், வாயிலோனுக்குச் சொன்னமை பெறப்பட்டது. (உரை) இங்கே 'புன்புலத்தைப் போய்' என்றதுபோல, 'காதத்தையோடி' என்பர் பின்; 510. (உரை) போகட்டார்-போட்டார், "வண்டுபோகட்டமலர் போன் மருண்மாலே,யுண்டு போகட்டவுயிர்க்கு" நள. சுயம். கககூ.

429. (ங) அரசர் கையிற் செங்கழுநீர்ப் பூவைப்பிடித்திருத்தல் மரபு; 1887, 2358.

431. மிலேச்சர்கள் வாயில் காப்பதுண்டென்று பழைய நூல்களால் தெரிகின்றது. நிகழ்ந்த செய்திகூறிய வாயிலோனைக்கோபித்தல் இராசதர்மமன்றென்பர்.

432. (ங) மீட்க என.

433. (ச) நெளி - நெளிய.

434. (உரை) 'முன்' என்றது, 5-ஆம் கவியின் உரையை. துத்தரிக்கொம்பு - ஒருவகை ஊதுகொம்பு; "கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்" கம்ப. கங்கை. ந௦.

435. உரையிலுள்ள, 'வீட்டினார்' என்பது, அடுத்தசெய்யுளிலுள்ளது. கைவந்தவர் - மிகத்தேர்ந்தவர்.

437. இக்கவியின் பொருளோடு, 450 - ஆம் கவிப்பொருள் ஒற்றுமையுடையது.

438. (க) இடையர்க்கு முல்லைமாலே உரித்து.

444. (க) பண்ணி - ஆயத்தஞ்செய்து. (ங) கலி- முழக்கம்.

447. (உரை) 'ஓடிப் போங்கோள்' என்பது, 'ஓடிப்போங்கள்' என்பதன் மரூஉ; தொல். வினை. உகூ-ஆம் சூத்திரத்திற்குக் கல்லாடரெழுதிய விசேடவுரையாலும் இது துணியப்படும். நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி, ருஅ:—"புறப்பட்டுத், தன்னுங்கோனாரவிற் றுமோ தரன்பள்ளி, கொள்ளுங்கோ னூர்மருவுங் கோள்" என்பதனாலும் அறிக; இங்ஙனம் பின்வரும் சொற்களையும் இப்படியே அமைத்துக் கொள்க. சீழ்க்கையை, 120-ஆம் கவிக் குறிப்பாலுணர்க.

449. (க - உ) சூளா. அரசியற். கஙச; கம்ப. நாகபாச. உகூங.

450. (க) இப்படியேசிறியதலையை, முனித்தலை, புருத்தலையென்று வழங்குவர்.

451. "பெயலுறழக் கணைசிதறி" (மதுரை. கஅங); "காலமாரியினம்பு தைப்பினும்" புறநா. கஅஎ.

453. (க) "மூன்று தலையிட்டமுப்பதிற் றெழுத்தின்" (தொல். புணரியல். க.) (உ) 'மெய்நூறு என்பதில், நூறு, பலவென்னும் பொருளில்வந்

454. (உரை) 'மேல்' என்றது, காந்தருவதத்தையாரிலம்பகத்தை. அரசர்-கட்டியங்காரன்கட்டளையால் அழுக்காறுற்றுப்போர் செய்தற்கு வந்தவர்கள். பொன்னுற் பண்ணவனுருவமாக்கியது முதலியவற்றை, 820-ஆம் பாடல் முதலியவற்றாலுணர்க.

455. (க) அற்றம்-அறுதல். (ச) நாளுற்றுலந்தான்-கட்டியங்காரன்.

456. விராடபுரத்திலிருந்த பொழுது அருச்சுனன் நிரைமீட்டசெய்தி இங்கே அறியற்பாலது.

457. (ங) விடலை: ககூ-பிராயத்திற்கு மேல், ந௦ - வரையுங்கூறப்படும் ஆண்பாற்பருவப்பெயர்; பன்னிருபாட்டியல், உஙஉ - ஆம் சூத்திரம் பார்க்க.

458. (க) சில்அரி-சிலவாகியபருக்கை.

464. (உ) பயம் - பிரயோசனம்.

466. (ச) சினவுநர்-கோபிப்பவர்; பகைவர்.

470. (ங) மகளிர்க்குரிய குணம் நான்கனுள்ளே நாண் முதலாவது.

471. தேரினைவழிபடுதல் மரபு; கம்ப. தேரேறு. உச.

475. (ச)"சிறுகாலைப்பட்டபொறி யும்" நாலடி. கக0.

476.(க)'கோலிழுக்குற்ற ஞான்று' என்றது, சச்சந்தனுடைய மரணகாலத்தை. (ரு) மால்வழி - சச்சந்தனுடைய சந்ததி.

481. (உ) பாதாலம் - பாதாளம்.

482. (உரை) நப்பின்னை: இவரை நீளாதேவியின் கூறென்பர்; இப்பெயர் பின்னை யெனவும் வழங்கும். நச்செள்ளை: பதிற்றுப்பத்தில், சு - ஆம்பத்துப்பாடியவர்; இப்பெயர், செள்ளையாரெனவும் செள்ளையெனவும் வழங்கும்.

484. (உரை) பதுமுகன் வணிகர் குலத்திற் பிறந்தவன்; 1791-ஆம்பாடலாலுணர்க; சூட்டு, மகளிர்க்குரித்து; 624.

493. (உ) சங்கு - ஒருபேரெண்; புறநானூறு கஅ - ஆம் பாட்டினுரையையும் சூளாமணிநிகண்டு கஉ - ஆம் தொகுதி, ககரு - ஆம் பாடலையும் பார்க்க.

494. (உரை) அசும்பு: "அசும்பு பொன்"(533) என்பர். குளிர்தல்-தங்குதல்;"குளிருமரப்பலகை" "குளிர்சாகரதத்தனென் பான்" 1782, 1973.

495. (க) இம்மியரிசி மிகவும் சிறியது 43 - ஆம் பாடற் குறிப்பையும், "மாகமேல்" (கந்த. காசிபன்புலம்புறு. உக)என்னும் பாடலையும் பார்க்க.

500.(ச) எனும்-என்னும்;சிறிதும்; 1688, 2014;"வழுவெனும்பாரேன்" சிலப். கசு: சுக.

501. (உரை) கம்மகாரர் - பிறர் தொழில் செய்வோர்; 495.

505. (உரை) ஒருப்படுத்தி - ஒரு வழிப்படுத்தி; 2922 - உரை.

513. (ரு) "ஒடிமரம்பற்றி" மணி. கசு: கச.

515. (ரு)"செவ்வனமுரையெனை" மணி. கசு: சுரு.

516. (க) "ஊர்திரை யுதைப்ப" மணி. கசு: கச.

519 (க) மதவலி - மிக்கவலியையுடையான்.

523. (உ) தாழும் - விரும்பும்.

526. (உரை) இருட்சி-இருளுதல்.

527. (ரு) பூரித்து - நிறைத்து.

531. (ச.) நள. சுயம், க0ச; காஞ்சிப். கழுவாய். ருக - பார்க்க.

532. (உரை) சந்திரமண்டலம் சூரியமண்டலத்திற்குக்கிழே யுள்ளதென்பது சோதிடநூலாருடைய கொள்கை.

535. (க) தானவர் - வித்யாதரர்; "சாமமார்ந் திலங்கு மேனித் தானவ னொருவன்," "விச்சா தரவேந்தன்" மேரு. சஞ்சயந்தன். சு, எ.

537. (க) மாடிய மென்பதற்குத் தலைச்சீராவென்று பொருள்கூறுவர், சைனர்.

538. (ரு) 'எள்ளுப்போட இடமில்லை' என்பது ஒரு பழமொழி.

544. (உ) ஊழ் - விதி. (உரை) ஏற்றிழிவு - உயர்வு தாழ்வு.

547. (உ) " நமரங்காளுய்யேன்" (கூர்ம. கண்ணன்பூமி. கசு.)(உரை) அரசமுல்லை - அரசனுடைய இயல்பின் ; காவன்முல்லை - அரசன் உலகின் மிகுதி: (பு- வெ. வாகை. கஎ, உச) இவ்விரண்டுக்கும் அறிகுறியாகமுல்லைமாலைசூடுதல்மரபு.

558. (உரை) கைச்சுரிகை - கைக்கத்தி; கட்டிலினுடைய மேற்கால்களில் உட்டுளையமைத்து அவற்றிற் கத்தியைச்செருகி வைத்திருத்தல் மரபு. இதுபெரும்பாலும் அரசர்க்குரியவழக்கம்.

565. (ச) உறுதிச்சுற்றங்களுள் ஒன்றாதலின், படையையச் சுற்றமென்றார்.

571. (உ) "புயலன் றலர்சடையேற்றவன்" (திருச்சிற். உச0.) (உரை) தகைவு - தடை.

573. (ரு) "நீனிறநிருதர்" கம்ப. வாலிவதை. கருக.

585. இதன் இரண்டாமடிமுதலிய வற்றை, 593 - ஆம்செய்யுள்ஒத்துள்ளது.

587. (க) "செம்மற்கென் றவளொருப்பட" பெருங். ௩: ௨௨, ௩௭.

588 (உ) நீலமணியின் தன்மை பாலால் ஆராய்ந்து கொள்ளப்படுமென்பது, 1325 - ஆம் செய்யுளாலும்விளங்குகின்றது.

589. (க) "எய்யாமையறீர்ந்து" (மணி. ௨௩: ௧௦௩.) (ச) நைடத. அன்னத்தைத்தூது. க.

590. (உ) வான் நக்கிடும்.

591. (௩) சைனர் இரவிலுண்ணாராதலின், 'வல்சி' என்பதற்குப் பகற்சோறென்றுபொருள்கூறினர்; 1939.

592. (உரை) குந்தாலி, கூந்தாலி யெனவும் வழங்கும்.

598. (ச) நேமி-திருமால்; "நேமியோ குலிசியோாகிகழ் கணிச்சியோ" (கம்ப. பிணிவீட்டு ௭௦.) (உரை) நாசி - வீட்டின் ஒருறுப்பு; "கட்டளை நாசியொடு கபோதங்காட்டி", "நாசியுமுகடும்", "வித்தக நாசிவேண்டிடத் திரீஇ" (பெருங். க: ச௦, க௪; க: ச௨, ௩௭; ௨: ௬, ௫௭.) "மாளிகைமேகந், தொடுகுடுமிநாசி தொறுந் தொடுத்தகொடி" (பெரிய. திருஞான. ௧௨); "தத்தொளிய நாசிக டயங்குவன" காஞ்சிப். திருக்கண். ௨௦அ.

600. (உரை) சோதிடர் - சோதிட்கர்; "அந்தர வாழ்க்கையர் சோதிடர் தாங்களு மைவகையர், சந்திரர் சூரியர் கோளவர் நாளவ ரல்லவராய், மந்தர மாமலை தன்னை வலமுறை சூழவருஞ், சிந்துபு நின்றசொல் லாதே விளங்குந் திறலவ்ரும்" நீல. தருமவுரை. ௬௩.

601. (ச) வியம் - ஏவல்.

608. (க) எடுப்பி - எழுப்பி.

611. (க) செய்கழல்-செய்யப்பட்ட வீரக்கழல்; வெளிப்படை ; 778: 4.

(உ) வட்டு - விளையாட்டிற்குரிய ஒருவகையுருண்டை ; "வல்லாளுடிய மணிவட்டேய்ப்ப" 983.

613. (ச)"இடையு நடையு மொருபிடியென்னவெழுதுவனே" சீகாழிக் கோவை, க௪௪.

614. (க) பிறந்தநாளில் மங்கலமாகிய வெள்ளணியணிதல் மரபாதலின், 'வெள்ளணியணிந்தருளான்று' என்பது, பிறந்தநாளைப் புலப்படுத்திநின்றது ; இதனை அகப்பொருளிலணக்கணத்தாலுமுணர்க; வெள்ளணியணிந்தோரை, "மங்கலவணியினர்" என்றார் முன்னும்; 603.

616. (க) ஒருவில் - எட்டுச்சாண்; இந்த அளவுப்பெயர் விகற்பத்தைச்சைன நூல்களிற் பரக்கக்காணலாம்.

620. (க) "வரைசெறிந்தனையசெம்பொன் மஞ்சங்கண் மலிரத்தோன்றி" சூளா. சுயம். ௨௪௦.

621. (க) யோகம் - நூல்; சைனநூன்மரபு.

622. (உ) "தேறுவெள்ளி லோத்திரப்பூம் பொருக்கரைத்த சாந்தும்" (விநாயக. திருமண. ௧௨௧); சோற்றுப் பொருக்கென்பதனாலும், பொருக்கின் பொருள் புலப்படும்.

623. (உரை) ஓமாலிகை - ஓமாலிகாதிரவியமெனவழங்கும்; "பத்துத் துவரினு மைந்து விரையினு, முப்பத் திருவகையோமா லிகையினு, மூறின நன்னீ ருரைத்த நெய்வாச, நாறிருங் கூந்த னலம் பெற வாட்டி" (சிலப். ௬: ௭௬ - ௯); "ஒப்பு முறையமைந்த வோமாலிகையும்," "ஒண்விளைப்பொலிந்த வோமாலிகையும்" (பெருங். க: ச௧, ௧௨௭; ௨: ௫,௩௨); "துவரினும் விரையினும், மொளிமணி கழி இய தொப்பவுவப்பொடுதிமிர்ந்து" (நைடத. சுயம். ௧௦௧); "புழுகுசட்டங்... குக்குல்", "கூறியவோமாலிகை யெண்ணுள் கொடு...ஒற்றுடை புரிந் தார்" (விநாயக. திருமண. ௧௨௦,

கஉக); "ஓமாலிகையுமுரிஞ்" திருத்தணிகை. வள்ளி. கஉஅ.

626. (உரை) சிச்சிலி-சித்திரிப்பறவை ; மீன்கொத்துங்குருவி.

632. (ங) திருவிளை. ரு: அ.

633. (ச) முன்னினார் - முற்படச் சென்றார்.

642. (உரை) அறைபோய-ஓட்டையான, அறிவற்ற. "அறிவறைபோகிய பொறியறு நெஞ்சத்து" சிலப். உ0: உரு.

647. (உரை) அவைப்பரிசாரம்: "அவைப் பரிசாரங்கடத்துளி போக்கி" பெருங். க: ௩எ, கககூ.

648 - 50. காஞ்சிமலர்த்தாது நீலநிறத்ததென்பதை, "மீனேற்றுக்கொடியோன்போன், மிஞிறார்க்குங் காஞ்சி' (கலி. உசு), "குயிற்கு மூரங்குடை காஞ்சியின்கோமளத் தாது, வெயிற்கு ழாமறைத் திருவிசும் பிருள்செய" (காஞ்சிப். திருக்கண். உக) என்பவற்றாலு முணர்க ; இக்கவிகளின் பொருள், "குறுஞ்சினைப்புன்னை நறுந்தாதாடி" (பெருங். ௩: சு, கூ) என்பது முதலிய அடிகளில் ஒருவகையாக அமைந்திருத்தல் காண்க.

648. (க) அலம்வந்து - சுழன்று.

652. (ங) குறள், ச0உ.

657. (உரை) கின்னரமிதுனங்கள்-ஒன்றை யொன்று பிரியாதனவும் இசையறிவிற்சிறந்தனவுமான ஆணும் பெண்ணுமாகிய ஒருவகை இரட்டைப் பறவைகள் ; மன்னரஞ்சு மதுசூதனன் வாயிற்குழலினோசை செவியைப் பற்றிவாங்க,நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந் தந்தம் வீணைமறந்து, கின்னரமிதுனங்களுந்தந்தங் கின்னரந் தொடுகின்றிலோ மென்றனரே"(பெரியாழ்வார். ௩: சு, ரு); "கின்னரமிதுனங்கள்கிளர்ந்துதோன்றுமே"(சூளா. துறவு. சு0); "மங்கையர் பாடல்கேட்டுக் கின்னர மயங்குமாதோ" (கம்ப. வரைக்காட்சி. ௩கூ); "பாடுகின்றன கின்னரமிதுனங்கள் பாராய்" (ஷெ. சித்திர.கஉ); "பண்டரு கிளவிக் கின்னர மிதுனம் பாற்சுவை மருட்டுபாட்டயரும்" (கூர்ம.சம்பு. ருச); "கின்னர மிதுனம் பாடலுக்குடைந்து" நைடத. சுயம். சுச.

658. சீரத்தைவீணையாகக் கூறுவர், இசை நூலார்; சிலப்.௩: உசு - ஆம் அடியில், "மிடறும்" என்பதனுரையைப்பார்க்க.

660. (ங) போதர-வர.

665. (ச) ஏற்றை - ஏறு.

666. (ங) தும்பு-சிம்பு.

667. (உரை) கல்லேந்திநீக்கியதை 690-ஆம் பாடலாலுணர்க.

670. (ச) பட்டது - நிகழ்ந்தது.

671. (ங) திங்கள்விரவிய பெயரினன் - புத்திசேனன் ; இது லக்ஷித லக்ஷணை யெனப்படும் ; அஃதாவது ஒரு சொல், தனது பரியாய நாமமாகிய ஒன்றைக்குறிப்பிட அது தன் பொருளினால் ஒன்றைக் குறிப்பிடுதல் ; 'எட்டிரண்டு-பத்து ; பத்தி' என்றாற் போல்வது.

672-5. இவற்றின் விசேடவுரையிலுள்ளவை, சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதையின் உரையால்விளங்கும்.

673. (ங) குருதி - சிவப்பு.

674. (ச) 'அநங்கன்' என்றார், அங்கமில்லாதவனாகிய சித்தனென்னுங் குறிப்புந்தோன்ற ; "அருவாய்ப் போதலழகிதோ" (3021) என்பர் பின். இப்பொருள், சைனரில் கன்னபரம்பரையில் வழங்குகின்றது.

675. (உரை) கமலவர்த்தனை : கமலவட்டணை யெனவும் வழங்கும் ; பரி. கசு: கக - ஆம் அடியின் உரையையும், மணி. 7: 43 - ஆம் அடியையும் பார்க்க.

676. (க) துவலை - துளி.

678. 'ஒருதாய்க்கு ஒருபிள்ளை' என்பது ஒருபழமொழி.

687. (க) கன்னி - அழிவின்மை.

696. (ங-ச) "தோடு பெய்தொரு காதினிற் குழைதூங்க" (தே. சுந்தர. பனையூர், க); "துளைபடு குழையி லொருகுழை யணிந்து" பாரத. நாடு கரந்து, உகூ.

705. (க) பூந்தவிசி னுச்சிமேனட ந்து: நைடத. சுயம். கo௲.

710. (க) குட்டம்-ஆழம். (உரை) தரங்கித்து - அலைவீசி; "அகந்தரங் கித்து" அரங்கத்தந். உக.

714. (ங - ச) சூளா. சுயம்.கூச.

717. (உ) "பல் கேள்வித்துறை போகிய" மதுரை. எகூo.

723. (ச) ஓர்த்து: சிலப். உஎ: உ௫க.

725. (க) கருவிவானம்: குறுந். சஉ; புறநா. க௫க, உoச.

730. (ங) யாழ்பண்ணி: நைடத. சுயம். கூச.

731. (உரை) "உட்கு நாணு மொ ருங்கு வந்தடைதர" பெருங் ந: கூ, அஎ; ச: கங, கoo.

737. (உரை) 'குன்று' என்றது, முன்கவியிலுள்ளதனை.

741. (உ) "ஒள்ளிய ஞெருமகன்" 2931. (ங) 'கள்ளாவா புலியைக் குத்து' என்பது ஒருபழமொழி.

743. (உ) "குழங்கன்மாலைவீழ" (கூர்ம. கண்ண னவ. எக); "வண்டு மூல் குழங்கன்மாலை" ஷெ. கண்ணன் மணம். கஉகூ.

744. (க-உ) கம்ப. மாரீசன். எ௫.

745. இடைநைதல்: நைடதம், சுயம். ககூ௫.

747. (உரை) சகூஎ - ஆம் குற ளின் விசேடவுரையிற் பரிமேலழக ரெழுதியிருப்பவை இங்கேயறியற்பா லன.

748. (உரை) யானை இசைக்கு வணங்கல்: பெருங். க: ங௫, கoo-கoக-ஆம் குறிப்புரையாலறியலாகும்.

749. (ச) தா - வருத்தம்.

758. (உரை) ஒன்பதுசுவைகளுள், ஒன்று அதிகரித்தபொழுது மற் றொன்று கெடுமாதலின், இங்கே 'வீரத்தாற்காமங்கெட்டது' என்றார்; இப்படியே ஒன்று மற்றொன்றைக் கெடுத்ததாகக்கம்பருங்கூறுவர்; கம்ப. பாசப். உங.

776. எ௫அ - ஆம் குறள், இச் செய்யுளுடன் ஒப்பு நோக்கற் பாலது.

778. (உரை) பொற்றகடுகளைத் தம் வாயுள் இட்டுக்கொண்டு தலைவனை வாழ்த்துதல்முதலியவற்றை, 'லோகா பிஸாரம்' என்பர் வடநூலார். பாடு குறித்து - இறத்தல்குறித்து; 2303-ஆம் பாடலைப்பார்க்க.

779. (ச) இயமரம் - ஒருவகை வாத்தியம்; பதிற். ௫o.

787. (ச) முடித்திலகம்-முடிமணி.

790. (ச) "காழமை குழிசிக் கதிர் த்தவாரத்து" பெருங். க: சஅ, கஅ.

800. (க) குறுந். ௫ச.

809. (க) "முற்றிய புளகச் சூழி முகம்புதைத் திலங்க வீழ்த்து" சூளா. கல்யாண. கo௫.

812. (உ) கருமை - பெருமை; சிலப். ப. கஎக, ஙஅஅ.

815. (உரை) ஒருப்பட்டு- துணிந்து.

819. (க) முழுமெய்: மார்பென் றங் கூறப்படும்; சிலப். ப. கஉங, க௫க, களஉ.

820. (மு) இங்ஙனம் பரிகாரம்செய் தல், ஸ்ரீாவகாசாரநூல்விதியென்பர்.

821. (ங) வலம்புரி - வலம்புரி வடிவமாக உலோகத்தாற் செய்யப் பெற்ற ஒரு பாத்திரம்; சங்கமன் றென்பர்; "ஆடுவ துன்னடி வாரப் புனல்" திருக்கலம்பகம், ச௫.

833. (உரை) விரற்சரடு - விரற் புட்டில்; விரற்கவசம்; கலி. எ - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க.

834. (ச) சுக்கிரன் களத்திரகாரக னாதலின், சுக்கிராஸ்தமனத்தில் விவா கம்செய்யலாகாதென்பது விதி.

838. (க) "படையமை சேக்கை", "இணைபடநிவந்த நீலமென்சேக்கை" கலி. கo, எஉ என்பவற்றின் உரைகளைப் பார்க்க.

852. (ச) சேடர் வரலாறு, பிரதாபருத்திரீயத்திலுள்ளதென்பர். காஞ்சிப். திருக்கண். கஅசு-ஆம் பாடலைப் பார்க்க.

862. (ரு)சீலமென்பது யானையின் நல்ல இயல்பு; "சீலமில்லன சினக்களிறகற்றுமின்" (2392), "சீலவிகற்பங்தெரிந்தனனுரைத்த லும்" (பெருங். க : ருஉ, ருசு) என்பவை விளங்கச் செய்யும்.

863. (ரு) சூளா. நகர. கச.

876. (உரை) ஏறட்டுக்கொண்டு-மேற்போட்டுக்கொண்டு.

878. (உ) வென்றான் - பிரகிருதியின் ஒருவகையாகிய காதிகன்மங்களைவென்றவன்; இங்கே அருகன்.

879. (ச)சூதாட்டத்தை ஜயமென்பது வடமொழிவழக்காதலின், 'சூது' என்பதற்கு வெற்றியென்றனர்.

880. (க) இட்டிடை - சிற்றிடை; "இட்டி தாயினும்" குறள், சஎஅ.

891. (ரு) ஏவல் - சொல்லல்; 1547, 3036.

892. (ரு) வண்டும் தேனும் ஒருகுணத்தனவென்பதை, "என்றன தேனின மிரங்கு வண்டொடு, சென்றன" (3034) என்பதனாலுமுணர்க; மணி. கஅ: சரு; நைடத. நாடு. கஅ பார்க்க.

892 - 3. இக்கவிகளின் உரையிலும், "பல்காற்பறவை" (பெரும்பாண். கஅரு) என்பதனுரையிலும் காணப்படுங் குறிப்புக்களால், இந்த இரண்டுநூல்களுக்கும் உரை செய்வதன் முன்னரே நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரைசெய்தனரென்று தெரிகிறது.

894. (ரு - ச): 3033 ; "அந்தர மருங்கின் வண்டு கைவிடாச், சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்" பெருங். க: சஉ, எஉ - ரு.

897. (உரை) வெதிரேகம்-எதிர்மறை.

908. (உ) பொன்றுஞ்சாகம்: 14, 1922.

911. (உரை) பொன்னிலேபிறத்தல் - ஹிரணியகர்ப்பம் ; அஃதாவது பொன்னாற்செய்யப்பெற்ற பசுவின் வாயினுள்ளே ஒருவன் புகுந்து பின்பு வெளிப்பட்டு, அப்பொன்னையெல்லாம் தானஞ்செய்துவிடுதல். இஃது அரசர்க்குரியவிதி.

912. (ரு) இதனால், இராசமாபுரத்தில் நேமிதீர்த்தங்கரருக்குக் கோயிலிருந்ததென்று தெரிகிறது.

916. (உ) நைடத. அன்னத்தைத் தூது. க.

924. (உரை) பரிகரிக்கின்ற - காக்கின்ற; இச்சொல், 'பரிக்ரகிக்கின்ற' என்பதோவென்று கருதப்படுகின்றது.

928. (உரை) புளிங்கறி: நன் - மயிலை; நன். வி. உயிரீற்றுப். உரு, மேற்.

930. (உரை) காரன்னமுண்மையை, "யவனர், ஓதிம விளக்கு" (பெரும்பாண். ருகசு - எ) என்பதனுரையாலும், "காரனங்குலாய்ப் படிந்த காட்சியொப்ப" (காஞ்சிப். கழுவாய், கசு) என்பதனாலுமுணர்க.

933. (உரை) பஞ்சநமஸ்காரமந்திரங்கள் இன்னவென்பதை 14-ஆம் செய்யுளின் குறிப்பாலுணர்க.

940. (ரு) "மீளிமை மைந்தர் பதின்மரை" கூர்ம. கண்ணன் சிவதீக்கை. உ.

942. (உரை) தருமத்தை விடைவடிவமுடையதென்பர் ; 3100-ஆம் கவியினுரையைப் பார்க்க.

948. (உரை) பரமாகமம் - இங்கே சிறுகமம். உயிர்போகும்கதி பலவகை ; விதத்தருடைய உயிர்போம் கதி, அவிக்கிரககதி ; அதற்குஸமயம், க; ஸம்ஸாரஜீவனுடைய உயிர்போம்

கதி விக்கிரககதி ; அது மூன்றுவகைப் படும்; அவற்றுள், முதலாவது பாணி முக்தாகதி ; அது (ட) என்பது போல் ஒருவளைவுடையது ; அதற்கு ஸமயம், உ; அது,தேவருக்கும் மனித ருக்குமுரியது ; இரண்டாவது இ லாங்கலகதி; அது, (ப) என்பதுபோல் இரண்டுவளைவுடையது ; அதற்கு ஸம யம், ந ; அது விலங்குகளுக்குரியது; மூன்றாவது கோமூத்திரகதி ; அது, மூன்றுவளைவுடையது ; அதற்கு ஸம யம், ச ; அது நரகருக்குரியது; இவ் விஷயம் தத்துவார்த்தசூத்திரமென் னும் நூலிற்கூறப்பட்டுள்ளதென்பர்.

951. (ச) ஓதி- ஞானம்; பெருங். உ: கக,கசுக-ச; கந்த.சுரம்புகு. உச.

952. நரகருயிரை இரும்புயிரென் றும் தேவருயிரைப் பொன்னுயிரென் றுங்கூறுவர் ; 3107 - ஆம் பாடல் முதலியவற்றைப்பார்க்க.

954. (உரை)தேவர்க்கும் நரகர்க்கு முள்ள சரீரம் வைக்ரீக சரீரம் ; அதற் குத் தடையும் ஆயுதச்சேதமுமில்லை ; இமையாமை, நிழலின்மை, மாலைவா டாமை, கால்நிலந்தோயாமை உண் டென்றும், மனிதர்க்கும் விலங்குகளு க்குமுள்ளசரீரம் ஔதாரிகசரீரமென் றும் அவற்றிற்கு ஆயுதச்சேதமுதலி யன உண்டென்றும் சொல்லுவர்.

956. (ந) வென்றவர் - பிரகிருதி களாகிய காதி, அகாதியென்னும் இரு வகைக்கன்மங்களையும் வென்ற ஸித் தர் ; "எண்வினையுமகற்றியின்பக் கட லாக்கித், தருமால்" (961) என்பத னாலுமுணர்க.

958. (ச) கோளுடைக்கிழமை - ஞாயிறுமுதலியவை ; ஏழுகோளுக் கும் அவற்றிற்கும் மிக்கஉரிமையுண் டென்பர் ; கிழமையென்பதன்பொரு ளே அதனைப் புலப்படுத்தும்.

960. நாய் தேவனானமை: "தேவ னு நாயாகுந் தீக்காட்சி யானுயுந், தே வனு நற்காட்சி யால்" அருங்கல.நஅ.

961. (உரை) எண்வினை: ஞானா, ரணீய முதலியன. திருமால் இரணி யனைக் கொன்றமை, அகளங்காஷ்ட கமென்னுநூலில் வந்துள்ளதென்பர்.

963. (க - உரை) 'மந்தரத்தின் ஞெழிலை இமயத்திற் கேற்றினர், அது மலையரையனாதலின்': "மேருக் குன் றத் தாரு நீர்ச் சரவணத்து" (மணி. கஅ:கூஉ.)"மன்னவன் படைச்செயன் மன்னன் செய்கையாப், பன்னுதல் போல்" பாகவத. கO : க, ருள.

966. (உ) உவறுநீர் - ஊறுநீர் : "உவறுநீருயரெக்கர்" (கலி. கஙக) ; "ஒண்செங்குருதி யுவறியுண் டருந் துபு" அகநா. ங.

971. (ச) "வித்தகர்கொடுத்த பித்தி கைப் பிணையலும்" பெருங்.க:சஉ,எச.

973. யானைச்செயல் : சடகோப ரந்தாதி, சஅ.

974. (ச) பெருங். க : நந, சரு - ருO.

982. (க) இவர்ந்த - விரும்பிய.

984. (க-உ) கஞ்சனுக்கு நட்புள்ள தெய்வம் ஏழு;அவை பூதனை, கழுதை, குதிரை, மருதமரம், பனை, யானை, சகடமென்று கூறப்படும் ; கண்ணபி ரானைக் கொல்லவந்தது யானையாகிய தெய்வம்; அந்தயானையைக்கொல்லா மல் விட்டு விட்டமையின், கண்ண பிரான், கரிவரதனுயினனென்பர்; இச் சரிதம், ஸ்ரீ புராணத்தில், 22-ஆம் தீர்த்தங்கரர் புராணத்துள்ளது.

990. (க - உ) நியாயங்களுள், கதம்பகோரக நியாயமென ஒன்றுண் டு ; அது, கடம்பின் அரும்புகளின் சேர்க்கையாலுண்டாயது போல்வதெ ன்பர் ; அது, கதம்பமுகுள நியாய மெனவும் வழங்கும்.

995. (உரை)படைக்கலவித்தை கற் பார், இலக்கத்தில் அம்பை எய்து கற்றல் : "இளம்பல் கோசர் விளங்கு படை கன்மா,றிகலின ரெறிந்தவகலிலை, முருக்கு" புறநா. கசுக.

# விசேடக் குறிப்பு.

996. (உ) "கருதின்வே முள்ளமும்" **கம்ப.** தாடகை. ரு.

998. (ங - ச) 'எண்ணில்காமமெரிப்பினுமேற் செலாப் பெண்மையும் நாணும்' **சிலப்.** ச: கoகூ-கo; அடியார். உரைநடை.

1002. (க - உ) **பாரதம்,** வேத்திரகீய. ரு. (ச) "ஆனு விசும்பினுகாய கங்கை" **மணி.** பதி. கஎ.

1009. பிற்காலத்திற்காகாதாகிய ஒப்பனைக்கு இக்கவியை மேற்கோள் காட்டினர் **நச்சினுர்க்கினியர்;** **தொல்.** செய். சூ. அo.

1015. ஆடையுடன் பிறத்தலும் மயிர் பிறந்தகாலத்திலிருந்தபடியேயிருத்தலும் இயக்கர்க்கு இயல்பென்பர்.

1021.(உ) சுவாகதம்: "சுவாகதங்கிலவென்று" **திருவிளை.** இரத வாதம். கரு.

1024. (உ) 1068 - உரை.

1025. (ங) ஆவியா - ஆவித்து; **கொட்டாவி** விட்டு; 1651; **கூர்ம.** பிலக்க. ருஉ.

1027. (உரை) உயிரைக் காத்த வருத்தமென்றது, சீவகன் யானையை அடக்கியதை.

1031. (ங) சீவகன் கற்குன்றேந்தினமை, "தொட்டெடுக்கலாவுலம் மொர் தோளி லேந்தி யாடினுன்" (690) என்பதனுல் அறியலாகும்.

1035. (உரை) என்பிள்ளையென்றது, கிளியை.

1038. (ங) அவ்விருந்தாள்: "இந்நின்ற குருசில்" **கம்ப.** குகப். கூள.

1040. (ங) "ஐயெயா விம்மி" **மணி.** உங: ங.

1041. (உரை)'இன்னுரோர்பொ ழுவர் முறார் காண்கவென்றல் யாப்பு' என்றது, "மதிமலிபுரிசை" (கக-திரு) என்னும் **திருமுகப்பாசுரத்தாலு**முணர்க.

1045. (உரை) இங்கே எழுத்துக்களைப் பாராட்டினமை, "மொழிப்பொருட்டெய்வம் வழித்துணை யாகென" (**சிலப்.** கo: கoo) என்பதை நினைப்பிக்கின்றது.

1048. (க) மைத்துன னென்றது மணஞ்செய்து கோடற்கு ஏற்றமுறையை யுடையவனென்றபடி; 187 - ஆம் பாடலினுரையைப்பார்க்க.

1049. (உரை) 'கொண்டுய்யப் போமின்' என்றது, 981 - ஆம் கவியிலுள்ளது.

1063. (உ) முழ - முழவு.

1066. (உரை) ஆளத்தியின் இலக்கணத்தை, **சிலப்பதிகாரம்,** கoரு-ஆம் பக்கத்திற் காண்க.

1078. (ச) மதஞ் செறித்தது - மதத்தை அடக்கியது.

1083. (உ) இங்குதல் - தங்கல்; 763, 2025; "ஆர்சூழ் குறட்டின் வேனிறத் திங்க" (**புறநா.** உஅங); "இங்குகதிர் முத்திநெடு" **தே. திருஞான.** மாகறல், ச.

1085. (உரை) 'மக்கட்டிரள்' என்பது அவாய் நிலையால் வந்தது.

1086. (ங) "தெரிகணை நோக்கி" **கலி.** ஙகூ.

1087. (ச) சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்தது **கதாகோசமெ**ன்னும் புத்தகத்திற் கூறப்பெற்றுள்ளதென்பர்.

1089. (ச) "இழைத்துணர்ந், தீண்டிய கேள்வியவர்" (**குறள்,** சகஎ.) (உரை) வெள்ளிவிலங்கு, காலிற்கிடந்தகதை :— தன்னுடையமுற்பிறப்பில், ஒருமுனிவர் அன்னப்பறவை வடிவங் கொண்டிருந்தபொழுது அவர்காலைத் தாமரைநூலாற் கட்டிய பாவத்தால், மகததேசத்தரசன்குமாரனுகிய இராசவாகனனென்பவன், மாளவதேசத் தரசனுடையகுமாரியாகிய அவந்திசுந்தரி யென்பவளோடு சேர்ந்திருக்கையில் வெள்ளிவிலங்கைப் பூண்டானென்பது. **கந்தியாரெ**ன்பவர் இங்கே தமிழ்ப்புலமைவாய்ந்த ஒரு

பெண்பாலார். இப்பெயர் ஆரியாங்கனைகளுக்குப் பொதுப்பெயராகவும் வழங்கும்.

1090. (க) "ஆரணவுவாத்தி" மணி. கரு: எக.

1092. (ரு) "திங்க ளரவுறின்" (கலி.கசഠ.) (ச) "விலாவித் தன்றுல் விழவலி நகர்" பெருங். க: சஎ, உருரு.

1098. (க) "இளம்படியார் பாராட்ட" சூளா. துறவு. 213.

1099. முற்றில்: கம்ப. நாட்டு. உக; திருவேங்கடத்தந்தாதி, கூஎ.

1102. (க) சிகை - பெண்மயிர். செய்கம் - செய்வேம்.

1107. (க) வட்டிகைப்பலகை - சித்திரமெழுதும்பலகை; வர்த்திகை- எழுதுகோல்.

1110. (ச) நாகரிகன்-பலகலைவல்லோன்; நாகரிகம்-கண்ணோட்டமென்பர் (குறள், ருஅഠ. பரிமேல்); "நஞ்சுமுண்பர் நனிநாகரிகர்" நற். ருருரு.

1112. (ரு) "பெருநீர்க்கருங்கடறுளுப்பிட்டது போல்" பெருங். க: ருஅ, உக.

1115. (க) கோலி - வளைத்து; "நெடுங்காழ்க் கண்டங் கோலி" முல்லை. சச.

1117. (க - உ) "காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப" மணி. உரு: சஅ.

1122. (உ) "கரியுண் விளவி னிறையழிந்தாள்" பிரபு. பிரபுதேவர்வந்த. சரு.

1124. (உ) "செதுமதித்தக்கன்" தே. திருஞான. அம்பர்மாகாளம், "படியுளார்" ரு.

1125. (ரு) "அறவியமனத்தராகி" 2877. (உரை) நவபுண்ணியக்கிரமம் இன்னவென்பதை, 2828-ஆம் கவியுரையாலுணர்க. பறவைதாதுண்டவண்ணம் பட்டிவிப்பரிவுதிர்த்தலை, மாதுகரவிர்த்தியென்பர்; இச்செய்யுளின் ஒப்புமைப் பகுதியையும்,1632 - ஆம் கவியினுரையையும் பார்க்க.

1135. (க) வணக்கலாற்றார் - தாழ்வித்தற்குரிய வன்மையிலார்.

1142. (ச) மிளை - காவற்காடு; "அருமிளையுடுத்த வகழி" சிலப். கரு: கஅரு.

1146. (ச) "ஆழ்ச்சிசொல்லிய" புறநா. கഠ.

1151. (ச) "கற்றுவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா. சிவானந்த. ரு); "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடுமன்று நிறைபுகுதர" (கலி ககக); "ஆன் கணங், கன்று பயிர் குரல் மன்று நிறை புகுதர" (குறிஞ்சி. உகஎ-அ); "தனிக்கன்றுள்ளிய புனிற்றுப்போல" பெருங். உ: கஅ, கഠ.

1157. (உ) "வேரொடுங் கீழ்ந்து வௌவி" (2727); "கீழ்ந்தறை போகிய கிளைஞ ராமென" கந்த. மார்க்கண்டேய. அகூ

1159. (ச) "சிந்தை நோய்கூர" மணி. கரு: எഠ.

1163. (ச) "வந்ததே, யாழ்கலத் தன்னகலுழ்" நாலடி, கஉ.

1165. கருணைமுதலிய குணவிசேடங்களால் நிகரில்லாதவனென்று கட்டியங்காரனாலும் பாராட்டப்பட்டிருத்தலின், இக்காப்பியத் தலைவனாகிய சீவகன் உத்தமநாயகனென்பதற்கு இக்கவி ஆதாரமாகவுள்ளது.

1172.. (உ) "தகைக்குநரில்லென்று" மணி. உரு: ருகூ.

1173. (க) உயரிய - உயர்த்திய.

1177. (உ) தாள்வரை, பாதசைலமென்று வடமொழியில் வழங்கும்; "தாள்வரை யிழிந்துவந்து" (சூளா. அரசியற். கூச.) தாள்வரை, தாழ்வரை இவ்விரண்டும் வேறு வேறு சொற்கள்.

1185. (க) "வானம்பொய்யாது" மணி. உரு: கഠஅ.

## விசேடக் குறிப்பு.

1195. (கருத்து) "கார்பெற்றபுல மேபோற் கவின்பெறும்" கலி. ௩௮.

1221. சாறு - இங்கே அருகனுக்குச்செய்யும் விழா.

1223. (உ-௪) சூரியனுக்குத் திலகம் உவமமாதல், "முன்னங் குடைபோன் முடிநா யகமணிபோன், மன்னுந் திலகம்போல் வாளிரவி - பொன்னகலந், தங்குங் கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போ, லங்கணுலகளந்தாற் காம்" (தண்டி. உரை, மேற்) என்பதனாலும் விளங்கும்.

1229. கூந்தலைஉரிமைகூறுவதுஒருவகைமரபு; புறநா. ௭௧௩, ௧௪௬, குறுந். ௨௨௫ - ஆம் பாடல்களையும் பார்க்க. (௪) "காலினேகினனே" 1412.

1230. (௩) 'வெறுவாய்க்கிலை கெட்டவன்' என்பது ஒருபழமொழி.

1232. (௧) இதா: "அறிந்திலேனிதா" (பரி. ௮); "பலிதாவென்றான் பகலோற்கி டென்றேன்"; (பொன்வண்ணத். ௩௩); இந்தா: "இந்தாவிஃதோரிளங்குழவி" கந்த. வள்ளி, ௩௫.

1233. (௧) ஊழ் - முறை.

1240. (௨) காதி-காதிகர்மங்கள்; 2713-ஆம் பாடலைப்பார்க்க. இந்தக்கர்மங்களைவென்றவன் அருகனென்பர்.

1241. (௧) குற்ற - பறித்த. (௪) "ஓர்பாணிக்கேதம்,பாடல் வேண்டுமென்று" பெருங். ௩: ௧௪, ௨௪௫-௬.

1243. (௨) உலகம் நித்தியமென்பது தம்கொள்கையாதலின், மன்னுலகம் என்பதற்கு நிலையாதலையுடைய சுவர்க்கமென்று பொருள் கூறுவர், சைனர். (௪) வினை - அஷ்டகர்மம்.

1246. (உரை) அங்கம் முதலியன, சைனாகமங்கள். இவற்றின்விரிவை இப்புத்தகம், ௮௧௫ - ஆம் பக்கத்துள்ள கீழ்க்குறிப்பால் அறிக.

1247. (உரை) இங்கே சாரணரென்றது, ஆலயத்திற்குவந்திருந்த ஸஜ்ஜீவராகிய முனிவரையென்பர்.

1248. (௧) விஷ்ணுவின்க்ருஹம் விண்ணகரமெனவும் இராஜக்ருகம் இராஜகரமெனவும் ஆனது போல, ஜினக்ருகமென்பது சினகரமென்றாயிற்றுப்போலும்.

1250. (௧) மகன்றில்: (302); "நீருறை மகன்றில்" (குறுந். ௫௭.) (௨) "பத்திரப் பாம்புரி யத்தகக் கலாஅய்" பெருங். ௩: ௩, ௧௭.

1252. (௩. உரை) கரியபிள்ளை, கொடி - காக்கை. காக்கைவலமாதல் நல்லசகுனம்.

1256. (உரை) மெல்கி-குழைந்து.

1258. (௧) "குடங்கையினொண்டு கொள்ளவுங் கூடும்" (சிலப். ௧௦: ௮௫); "நொண்டு நுண்டுளி தூவி" தணிகை. பிரமன். ௧௩.

1260. (௩) 'பதிவிரதையைக் கெடுக்கப் பதினைந்துபொன்' என்பது ஒருபழமொழி.

1267. (௨) கருப்புரக்கன்று: (மலைபடு. ௫௧௬-உரையைப்பார்க்க.) "எம்பிரான் குடங்கையான் வளர்த்த மாங்கன்றும்" காஞ்சிப். திருக்கண். ௧௧௭.

1287. (உரை) 'சித்தராநுடச்சிந்து' என்றவிஷவைத்தியநூலொன்று தமிழில் அருகி வழங்குகின்றது.

1302. இச்செய்யுளின் பொருள், கந்த. வில்வலன் வதை. ௨௭-ஆம் செய்யுள் முதலியவற்றில் ஒருவாறு அமைந்துள்ளது.

1305. (௪) கம்ப. கார்முக. ௬௨.

1311. (௩) "கட்டினிணக்கு மிழிசினன்" (புறநா. ௮௨); 'நிணர்ந்து' என்றும், 'நிணர்க்கும்' என்றும் பிரதிபேதமுண்டு.

1320. (உரை) கொய்சகம்: "பட்டின் கொய்சகம்" சூளா. சுயம். ௮௬.

1325. (௩) மாமை நிறம்: நற். ௬; ஐங்குறு. ௩௫.

1337. (௧) 882-ஆம் கவியின் ஒப்புமைப்பகுதியைப்பார்க்க.

1338. (க) மாலைவகை: 2054, 2656, 2919; குறிஞ்சி. கoஅ; பரி. கக: அo - அஉ; உo: உக - ஙo; பெரிய. முருக. க.

1342-3. (உரை) 'உற்றார்க்குரியர் பொற்றொடிமகளிர்' திருச்சிற்.உஉரு-ஆம் பாடலுரை முதலியவற்றிற் காணப்படுகிறது.

1349. (க) "பறைந்த வம்பொற் கனைகழற் கால்" கூர்ம. மனுமரபு. உக.

1357. (உரை) சமுதாயசோபை-எல்லாஞ்சேர்ந்த சேர்க்கையா லுண்டான அழகு.

1364. (உ)பாவை,பட்டாங்குகூறு தற்கண்வந்தது: பெருங். ங: எ, அச.

1367. (உரை) பிள்ளைகளுக்கு விளக்கம் காவலாக இடுதல், பிரபு. மாயையுற். ருo-ஆம் செய்யுளாலும் அறியலாகும்.

1374. (உ) "விருத்திகொடுத்துத் திருத்தகு செய்தொழில்" பெருங்.ச: ங, உச); "அரசொடு நட்டவ ராள்ப விருத்தி" வளையாபதி, உஎ.

1415. (க-உ) நாலடி. ஙஎக.

1419. (க) உண்டு- ஒருவகையாக வுண்டு; ஸ்யாதஸ்தி. (உ) இல்லை - ஒருவகையாக இல்லை;ஸ்யாந்நாஸ்தி.

1426. (ங) "மற்றுந் தொடர்ப்பா டெவன் கொல்" குறள், ஙசரு.

1427. (உரை) ஏகாந்தியாதல்: "ஏகாந்தநெறிபுக்கங்கின்மை கண்டவ ஞெத்த தன்றே" மேரு. நால்வரும். கஉ.

1432. (ங) மூரியும் - கெடும்.

1435. (உ) "கலியுதிர்ந்து வீழ்ந் தற் றிளமை" நாலடி. கஎ.

1436. (ரு) அருங்கலச்செப்பு, ...-ஆம் பாடல் முதலியவையும், மேரு மந்தரபுராணம், முதலானது சுருக்கத்துள்ள "உரைததவிப்பொருளின்" என்னும் பாடலும்இரத்தினத்திரயத்தை நன்கு விளக்குகின்றன; "அவ்வினைய மாறும்முடமெண்மையமுஞ், செவ்விதினீக்கிச் சினங்கடிந்து - கவ்விய, எட்டுறுப்பினுய வியல்பினாற் காட்சியார், சுட்டறுப்பர் நாற்கதியிற்றுன்பு" (அறநெறி. கக) என்பதும் இங்கே அறியற்பாலது.

1449.(உ) வேதவாணிகன்: 'வேத வாணிகர்' பட்டின. உoரு - எ; ந.

1459. (உரை) 'நமோ அரஹந்தாணம்' என்றதை மந்திரத்தியானமென்பர்.

1461. (உ) நோக்கு - அழகு; "நோயிகந்து நோக்கு விளங்க" மதுரை. கங.

1462. (க):1706;"செம்பொற்யாகத்து", "பல் பொறிக்கொண்ட வேந் தெழிலகலம்" புறநா.௬அ:ரு; ககக: உஎ.

1463. (க) இறுவரை:"இறுவரை புரையுமாதிருகரை", "இறுவரை, யிழிதரும் பொன்மணி யருவி" (பரி. எ, கங); "இறுவரை வேங்கையி ஞெள்வீ"(கலி.சக); "இறுவரைவீழ் நரி னடுங்கி" (அகநா. ஙஉஉ); இறுவரை - பெரியமலை.

1464. (உ) "கடிறு பலதிரி கானதரிடை" (பெரியாழ்வார். ங:உ, ௬) என்பதிற் களிறு கடிறெனஎதுகையில் வந்தாற் போலக் கெளிறு கெடிறென இங்கே வந்தது.

1471. (க) "நிலந்தினக்கிடந்தநிதியமோடு" (மலைபடு. ருஎரு); "நிலந்தினக்கிடந்த நெடுநிதிச் செல்வம்" தணிகையாறு. உரு.

1472. (ச) உருக்குற்றுள் - உருகு தம்பயடைந்தாள்.

1484. (க) ...

1486. (ப) கடாம் - கன்றாம்.

1487. (க) "மா... கற்சுற்ற ... மெளவல்" 485.

1494. (ச) கடலனையைய ஆயுளையுடையவராதலின் தேவர்கள், 'சாத

னும் பிறப்புமில்லாத் தன்மைபெற்ற வர்கள்' என்று கூறப்பட்டார் ; உப சாரம்.

1501. (ச) நீங்கலுற்று - பிரியக் கருதி.

1503. (க) "முறுகித்தாழ்ந்து" **காஞ்சிப்.** நகர. க.

1504. (க) "திருச்சே ரகலத்துப் பிரச்சோ தனன்" (**பெருங்.** க: சஉ, கo) ; "திருத்துயி லகலப் புத்தேள்" **காஞ்சிப்.** திருமண. ௩o.

1510. (ச) தக்கதுவோ-தக்கதோ.

1517. நுன் : 324; "நுனதாளை" **கந்த.** மோன. கூ.

1525. (௩) நீடினள் - தாமதித்த ளள்.

1526. இக்கவியும் இதன் பொரு ளும் மிக இன்புறற்பாலன.

1529. (க) துற்ற - உண்ண.

1543. (உ) எனைவர்-எத்துணைவர். (௩-ச) 'மனைவியுமற் றொருத்திமக்க, ளொங்வாதார் தாமில்லை யொப்பாரே நால்வரென வுரைத்தான் சான்றோன்' என்றும்பாடம்.

1547. (க) 'உவவு' என்பதற்குச் சதுர்த்தசியென்று பொருள்கூறி, சதுர்த்தசியிலும் அட்டமியிலும்பட்டி னியிருத்தலின் பயன்கள், முறையே, கச - ஆவதாகிய அயோகி குணஸ்தா னத்தை அடைதலும் எண்வினைகளைக் கெடுத்தலுமென்று சொல்லுவர்.

1550. (க) "வேற்றுவரென்று நில் லா" (2986.)(ச)"ஆற்றுணவேண்டுவ தில்" **பழ.** ருரு.

1552. (உ) "பழுதெண்ணு மந்தி ரியின்" **குறள்,** சுஙகூ.

1553. (உரை) விக்குள் - விக்கல்.

1558. (க) எருத்து - கழுத்து.

1560. (உ-௩) **பரி.** கஎ: க௩-ச.

1561. (க) பழு - விலாவென்பு. (உரை) கைத்தளம், 1606 - ஆம் கவியுரையைப் பார்க்க. "அதள்புனை யரணம்" (**சிலப்.** சச ' கஎo) என்பதற்குத் தோற்கைத்தளமென்று பொருளெழுதியிருக்கின்றனர். அது தேன்கூட்டிற்கு உவமையாதல்,"கைத் தளம் போலத் தூங்கும் கமழ்பசுந் தேனிறால்","கைத்தளமென்னப்பூத்த கருஞ்சினை வழையிற் றூங்கு,மொய்த் ததேனிறால்" (**கூர்ம.** சம்புத். கூச; ஷை பிலக்க. ௫o) என்பவற்றாலும் விளங்கும்.

1562. (க) அறை-பாறை. (க-உ): **கூர்ம.** சம்புத். உஅ.

1565. (உ) "சுள்ளிவேலியர்" **தணிகை.** நாடு. ௩௫.

1567. (உரை) உழுவலன்பொடு தோன்றிய மகளிரிடத்தல்லது சீவக னுக்கு வேட்கைநிகழாதென்று ஈண் டுக்கூறியது, "ஏகு நல்வழி யல்வழி யென்மன, மாகுமோவதற் காகிய கா ரணம், பாகு போன்மொழிப் பைந் தொடி கன்னியே, யாகும் வேறிதற் கையுற வில்லையே" (**கம்ப.** மிதிலை. கசஎ)என்பதனாலும் வலியுறுகின்றது.

1578. உறுகோள்: "குளங்கோடு மென்றிதுவு முறுகோளே" (**கம்ப.** சூர்ப்பநகை. கசo.)

1583. (௩) ஈருள் - ஈரல்.

1587.(ச)எங்கணும்-எவ்விடத்தாய்.

1590. (ச) கெடுத்து - இழந்து.

1596. (மு) "மாரியுந் திருவு மக ளிர் மனமுந், தக்குழி நில்லாது பட் டுழிப்படும்" **பெருங்.**க:௩௫,கருகூ-எ.

1597. (ச) 2627; "வெண்ணெ யின் குன்றந் தீயால் வெதும்புகின் றதனே டொத்தான்" **சூளா.** கல் யாண. கககூ.

1599. (உரை) 'பிறரிளமைபற்றி' என்பதைப் பிறரறிவின்மை பற்றியெ னத் திருத்திக்கொள்க; **சிலப்.** கஉ : ௫க - ௩ ; அடியார். உரை யைப்பார்க்க.

1600. (உரை) 'மெலிந்து பின்னிற் கும்" என்பது 1597-ஆம் கவியிலுள் ளது.

# விசேடக் குறிப்பு.

1601. (௧) பரியாது - வருந்தாது.

1609. (௧) "முகடுயருலக முன்னிய முனிவரும்" **பெருங்.** ௧: ௩௮, ௨௧௯.

1613. 'மகளிரைப்போலே ஐம்புலனுக்கும் வேண்டும்பொருள்களையுடைய' என்பது, "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" (**குறள்,** ௧௧௦௧) என்பதன்பொருளாகவுள்ளது.

1615. (௩) கண்கொள்ளும்-துயில் கொள்ளும்.

1622. (௨) "மதியேக் கறாஉ மாசறு திருமுகம்" **சிறுபாண்.** ௧௫௭.

1625. (௧) "கலையினுங் களியினும்...மடவோர்மருட்ட" **பெருங்.** ௧: ௩௪, ௩ - ௪.

1628. (உரை) அலகம்பு : "அஞ்சம்பையு மையன்றனை தலைகம்பையு மளவா" **கம்ப.** கங்கை. ௩.

1631. (உரை) இருதலைப்புள்ளின் ஒருயிரேம் : "ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று, போ ரெதிர்ந் தற்று" (**கலி.** ௮௯) ; "இரு தலைப் புள்ளி னோருயிரம்மே" (**அகநா.** ௧௨) ; 'யானென்புழி இருதலைப் புள்ளின் ஒருயிரேனாகிய யான்' **திருச்சிற்.** ௧௨, **பேராசிரியருரை.**

1632. (௧ - ௨) "நுண்ணிய நூல் பல கற்பினுமற் றுந்த,னுண்மையறிவே மிகும்" (**குறள்,** ௩௭௩.) (௪) என்-யாது ?

1639. (௪) அமைக: "ஆக வமைக வதுவேயவ்வரச நீதி" **சூளா.** அரசியற். ௨௧௧.

1640. (௧) உற்று - கருதி; 1501.

1642. (௨) செய், உவமச்சொல் ; 2490.

1644. (௧) ஓம்பி - தீர்த்து.

1646. (மு) துரோணாசாரியர்பெருமை, **பாரதம்,** ௧௫-ஆம் போர். ௩௨-ஆம்செய்யுள் முதலியவற்றா லறியலாகும்.

1648. "அழலி னீங்கா னணுகான்" (**நன்னூல்,** பாயிரம்) என்பதை இக்கவி ஒத்துள்ளது.

1651. (௪) "தளவின் சிரல்வாய்ச் செம்முகை" (**ஐங்குறு.** ௪௪௰.) (உரை) குருதிக்காந்தள் - செங்காந்தள் ; "குருதிக் காந்தண் மென்மலர்க் கரம் வைக்கும்" (**கூர்ம.** பிலக்க. ௧௯.)

1653. (உரை) தீவிது - இனியது.

1656. (௨) **கூர்ம.** சம்பு. ௮௫.

1661. (௩) என்னாய் - என்று கருதாய்.

1662. (௨) "ஆம்பலந் தீங்குழல்" **சிலப்.** ௧௭ : "பாம்புகயிறு" என்ற செய்யுளிலுள்ளது.

1670. (௨) "மல்லிகை யொலியல் சூடினார்" (**சூளா.** துறவு. ௩௪) ; "ஒலியற் குழலார்" **விநாயக.** தேவர்கள். ௧௪.

1676. (உரை) 'பஞ்சகிருத்தியம்: நிவாரணம் (=தடை), சேதம் (=வெட்டுதல், பிரத்யுத்தானம் (=எதிர்ப்பாணம்தொடுத்தல்), நித்திராணம் (=ரக்ஷணம்), பிரகரணம் (=காலதேசத்தொழிலின் பார்வை)' என இந்த ஐந்துபெயர்களமைந்த சுலோகமொன்று மிகவும் பிழைபட்டுச் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது ; அதன் உருவம் சிறிதும் புலப்படவில்லை ; இவற்றின்பெயர் ஆகர்ஷணம், விகர்ஷணம், ஸங்கர்ஷணம், பிரகர்ஷணம், உத்கர்ஷணமென் றிருக்கவேண்டு மென்கின்றனர், வடமொழிப்புலவர்.

1677. (௩) "செருக்கொள்யானை மருப்பிடைத்திரியும்" **பெருங்.** ௧: ௩௭, ௩௭.

1680. (௪) வியத்தர் - வியக்கத்தக்கவர்.

1682. (உரை) 'ஒன்று' என்பதன் விசேடப்பிரயோகம்: 1745; "முழுவது முணக்கிமெய்ம் முடிப்பதொன் றெரி,யொழுகுருஞ் சயின் றுயி ருலைப்ப

தோன்றுடல், பழுதுற வரைகுளம் பாய்தலொன்றுசெய், திழுதைசெயிழி வினை யிரித்துமென்றெணி" விநாயக். கீர்த்திமகப். கo.

1686. (ரு) மூவியல்: சிரோதயம், பூபதனம், தெரியுங்காலம்.

1700. (க) "வண்டேது சாந்தம்" (கலி. கூரு); "மல்லிகையே வெண் சங்கா வண்டேத" (நள. சுயம். கக); "மருக்காவி வண்டேத" காஞ்சிப். சித் திச. க.

1708. (ச) வித்தைகளுள், மகா வித்தை - ருOO, கூடீடபல்லகவித்தை - எOO, ஆக வித்தை - கஉOOம் விஞ் சையர்க்குரியனவென்றும் மதிமுக மென்பது அவற்றுள் கூடீடபல்லகவித் தையைச்சார்ந்ததென்றும் சொல்லு வர். இந்தவித்தை ஆபோகினியென்று ஸ்ரீ புராணத்திற் கூறப்படுகின்றது.

1713. (ச) காமினி - கமனஞ் செய்தற்குக்கருவியாகவுள்ள மந்திரம்.

1722. (க) சுரிகுஞ்சி - கடை சுழன்றகுஞ்சி; குறிஞ்சி. கOஎ-கஉ;ந.

1724. (ரு-ச) துவைதவனமென்ற வனத்தில் தங்கியிருந்த பொழுது இந்திரராசனென்னும் வித்தியாதர னுடைய பகை கடிதற்குத் தனியேசெ ன்ற அருச்சுனன் மீண்டுவருதற்கு ஐந்துவருடம் சென்றன வென்பர்.

1725. (உரை) இருமுதுகுரவர் - தாய்தந்தையர்; சிலப். கரு: சுஎ; நைடத. அன்னத்தைக்கண். சுஎ.

1731. (க) குடவரை - அத்தகிரி.

1736. (உரை) கட்டியங்காரன் மக்கள் நூற்றுவர் - காளாங்காரகன் முதலியோர்.

1738. (க) ஓம்படை-பாதுகாப்பு.

1741. (ச) "இலைப்புரை கிளைத் துப் பருவந்தவரிபோன்றார்" (காஞ் சிப். திருக்கண். கOரு); இலைப்புரை கிளைத்த லென்பது புரைகிளைத்த லெனவும் வழங்கும்; இ - வி. சூ. சுரு௫-ஆவதன் உரையைப்பார்க்க.

1745. (ச) மலைமகள் - காந்தருவ தத்தை; "மலைமகடன்மைகண்டே" என்பர் பின்னும்; 1751.

1746. (உ) வெப்பர் - வெம்மை; "புத்தகற் கொண்ட புலிக்கண் வெப் பர்" (புறநா. உசுசு); இது வெவ்வ ரெனவும் வழங்கும் (பதிற். சக.) (ச) இளிவருகிளவி - பொருந்தாதசொல்.

1747. (ரு) "எல்லிருள் விடுப்ப வெழுந்தனன் போகி" பெருங். ரு: உ௫, கசுரு.

1752. (க) பெரிதுநன்று - மிக நன்று.

1753. (ச) அன்றே - அப்போதே. (உரை) மூவகைப்பாவம் - செய்தல், செய்வித்தல், உடன்பாடென்பன; இவற்றை முறையே கிருதம், காரிதம், அநுமோதமென்பர் வடநூலார். 2781-ஆம் கவியுரையைப்பார்க்க.

1754 - 5. (உரை) குக்குடசர்ப்ப முண்டென்று, "நித்தியமாய" (நீல. சாங்கிய. சஎ) என்பதனுரையாலுந் தெரிகின்றது.

1756. வணிகர் மூவகையரென்ப தும் அவர்களிலக்கணமும் பின்னுள்ள வெண்பாவால்விளங்கும்: 'இப்பர்கவிப் பர் பெருங்குடி வாணிகரென், றெப்பு டையமூவ ருரைக்குங்கால் - தப்பின், மிதியடியே ருனைமிசை நோக்கினர் கண்காணு, நிதியுடையராவர் நிலத்து' (சீவகசம்போதனை, சு - உலோகாதி காரம், சஉ.) இஃது எதிர் நிரனிறை.

1760. (ச) இங்கே'எம்பி' முன்னி லைப் படர்க்கையாக வந்தாற்போல "எந்தைவல்ல தியாவர் வல்லாரென" (கம்ப. சடாயுகாண். சO) என்பதில் 'எந்தை' என்பதுவந்திருத்தல்காண்க.

1761. (க) "நெய்த்தலைப் பால்கல ந்தனைய நேயத்தான்" (நெய் - தேன்) கம்ப. கலன்காண். ரு.

1769. (ச) வேய்ந்தரிக்கும் - சூழ் ந்துமேயும்.

1770. (க) ஐப்பசி - அச்சுவதிநாள்,

1775. (க): புறநா. கஉச: க. (ச) சாத்து-வணிகர் திரள்; "குதிரையைக் கொண்டு குடநாடதனிற், சதிர்படச் சாத்தராய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி.); "சாத்தொடு போ ந்து" சிலப். கக: கசுo.

1777. (ச) "சங்குமுரற மொலி ப்ப" பெருங். ௩: கசு, கசுரு.

1780. (க) ஆலி - ஆடி.

1782. (ச) சேயவள் - தூரியவள்.

1787. (உ) 'அடிகள்' என்பது பெண்பாலுக்கும் வருதலை, இந் நூல் 1792, 1884, 1909-ஆம் கவிகளாலு முணர்க; சிலப். கச: உச; பெருங். ௩: அ, எo.

1794. (க) யாண்டு-ஆண்டு; வருடம்.

1798. (௩ - ச): பெருங். உ: கூ, கரு0 - ருங.

1808. (உரை) நீவாது - நீங்காது.

1813. (உரை) இன்னநாளிற்பிறந்த இன்னுனென்றல் மலைநாட்டில் இக் காலத்தும் வழங்குகின்றது.

1834. (க) யானைப் பேச்சான மொழி: முல்லை. ௩ரு; மலைபடு. ௩உரு - எ.

1836. (உரை) புலிமுகப்பு: (பரி. கo: சக-ருரு; பெருங். உ: கூ, சுஅ.) "உஞ்சேனைதன், புலி முகவாயில்", "கொடிப்புலி முகத்துவாயிற் கோட்டை" (உதயணகுமாரகாவ்யம், உஞ் சைக்காண்டம், எஉ, கoo.)இப்பெயர் இக்காலத்துச் சில இடங்களில் ஒலி முகமென்று வழங்குகின்றது.

1837. (௩ - ச) 973 - ஆம் பாட்டின் ஒப்புமைப் பகுதியைப்பார்க்க.

1838. (௩) சிலப். கரு: ருக.

1843. (௩)தோணேக்கல்: பல்வரிக் கூத்தினுள் ஒன்றாகிய தோள்வீச்சென் பதுதோணேக்கமெனவழங்கும்;சிலப். அஅ-அகூ-ஆம்பக்கம் பார்க்க; "நரனி ருந்து தோள்பார்க்க நான்கிடந்து புல ம்புவதோ" கம்ப. சூர்ப்பநகை. கoகூ.

1844. (உ) வண்டர்-ஓவர்; "ஊழி வாழியென் றோவர் தோன்ற" (சிலப். உசு: கஉச); "வண்டர், குழுக்க ளுங் குலை குலேந்திட", "நாணுள்ளத், தவி கை யோவரு மொருவழி யகன்றிட" திருவிளை. சக: சஅ, ருo.

1849. (ச) "வி ர வா ர் ம ணி நிரைக், கட்சியுட் கா ரி யெ ழு ம்" பு - வெ. க: ௩.

1853. (௩) சேக்கும் - தங்கும்; "நிரையார்மா சேக்கு நெடுங்குன்ற நாட" நாலடி. ௩கசு.

1864. அவரவர் தகுதிக்குத் தக்க படி நடக்கவேண்டு மென்பது இத ஞல் அறியப்படுகின்றது.

1872. (உ) விருந்தா - புதிதாக; "விருந்தா யடைகுறுவார் விண்" பு - வெ. ௩: கஉ.

1873. (௩) காப்பென்பது மஞ்சட் காப்பு, மாக்காப்பு, எண்ணெய்க்கா ப்பு, மிளகுகாப்பென்று இக்காலத் தும் இருவகைவழக்கிலும் வழங்கும்; 'குரவர்க்குக் காப்புக்களைக் குறித்துப் போற்றி யென்றல் மரபு' (சிலப்.க௩: கரு - எ; அடியார்) என்பதும் இங் கே அறியற்பாலது.

1874. (௩-ச): மதுரை.உஉரு-அ.

1882. (ச) ஆத்து-பிணிக்கப்பட்டு; "ஆப்புறுபாடமோ டருத்தங் கூறி", "ஆத்தவன்பின்", "ஆப்புற விரீஇய பிற்றை" பெருங், க: ௩எ, உஉ; உ: கசு, கூக; ச: ச, சு௩.

1884. (க) "மக்களுக்கஃதோ" 2344.

1894. (க) ஆற்று - வலியில்லாத.

1897. (க) சேவகங்கொள-துயில் கொள.

1898. (உ, ச) பவழம், கவழம்: "பவழவரையன்ன திரடோள்", "கவ ழ ம னை ே ம வு களியானை" (சூளா. துறவு. கசுக); "கவழக் களிப்பியன் மால் யானை சிற்ருளி, தவழத்தா னில் லா ததுபோல்" திணைமா. சஉ.

1902. (க) விலங்கின் சாதியுள், 'மகன்மா' என்று ஒன்றுண்டென்று நீல. சாங்கிய. சஎ-ஆம் செய்யுளுரையால் தெரிகின்றது.

1906. (உ) கோய்-பரணி; "கோய் வாயிற்கிழ்" சிறுபஞ்ச. கஎ. (ச) கன்னல் - கரகம்.

1907.(ரு) மரங்களுக்குயிருண்மை நீல. மொக்கல. கஎ - ஆம் பாடல் முதலியவற்றால் விளங்கும்.

1912. (உ) 'வாளயா நெடியகண்ணாள்' என்பதும் அதனுரையும் "தாதுலராத கோதை" (திருவிளை. ருக: உரு) என்பதற்குரிய பொருளை விளக்கின.

1913. (ரு) "பருதிமார்பினில்" காஞ்சிப். காப்பு.

1921. (ரு) "சுற்றமொடு,நுகர்தற்கினிதுநின் பெருங்கலி மகிழ்வே" பதிற். கஉ : உச - ரு.

1929. (ரு) எய்தும், 'சூளுறும்' (2126) என்பதுபோல இங்கே பன்மைத் தன்மை.

1939. சைனர் பகலிலேயே உண்பவராதலின், பகலுண இக்கவியிற் கூறப்பட்டமை கூர்ந்து அறிதற்பாலது. இதனாலே தான் இந்நூல் 591 - ஆம் கவியிலுள்ள வல்சியென்பதற்குப் பகற்சோறென்று பொருளெழுதினர்.

1952 - 6. இவற்றிற்கூறிய பந்து விளையாட்டுவிகற்பங்கள், பெருங்கதையில், பந்தடி கண்டதென்னும் பகுதியால் விளங்க அறியலாகும்.

1963. (உரை) சாற்றுமாய் - சாற்றுவதாய்.

1966. (ரு) சமம்-விறகு; புறநா. உருக.

1967. இக்கவி, "காவிவலவனை" (தக்கயாக. ௱ எ - உரை) என்பதற்கு மேற்கோள்.

1969. (ச) திருவி - செல்வி.

1975. (க) இடை - சமயம்; 'இடையின்றுகுறுகி" (புறநா.ருச); "தளரிடை யறியுந்தன்மையள் கொல்லோ" மணி. ச: கஅ.

1981. (ச) "கூடியிருவருமொருவ ரெனவிதயங் கலந்ததற்பின்". பாரத. அருச்சுனன். தீர்த்த. ரு0.

1982. (க) "நிலவிலங்கிய துகிலினை" (கம்ப. இலங்கையெரி. உசு.) (உ) கண் புதையாது - மறையாமல்.

1985. (ச) "அனங்கனுக் கிலக்கமாகி யம்புகொண்டழுத்த வில்லாரர்" (188) என்றார்முன்.

1986. (க) தொழித்து - சிதறி; 2673 ; "சிதர்தொழிற் றும்பியொடு மதர்வண்டு மருட்ட" பெருங். க: ருரு, உஅ.

1991. (க) மருதயாழ் : புறநா. கசக.

1998. (ச) அயாவுயிர்த்தொழிதல்-இளைப்புத்தீர்ந்துவிடுதல்; 2947; "பார்மக ளயாவுயிர்த் தடங்கிய பின்னர்" (சிலப். கரு: உக); "அழுதனளேங்கி யயாவுயிர்த்தெழுதலும்" மணி. உக: உக.

2002. (ச) புறநா. ககரு: க.

2010. (உ) நவிரறு - பீறுதலற்ற.

2024. (க) நானம் - வாசவெண்ணெய்; "நானவெண்ணெய் கதுப்புரைத்து" (2692); "வாசவெண்ணெயும் வண்டிமிர்சாந்தும்" 864.

2026. (க) தழிய-தழுவிய;2696; "வெங்கதிர்தழிவர், தார்பூண்டன" கம்ப. கரன்வதை. கக.

2029. (ச) என்செய்கு-என்செய்வேன்.

2030. (உ) 'நிண' என்னுமுதனிலையே பெரும்பான்மை வழக்கம்.

2037. காண - கேட்க; "பேச்சைக்கண்டு" திருவால. கஅ: உஅ.

2040. (ச) பிறைப்பூண் - பிறைவடிவமுள்ள ஆபரணம்.

2043. நூறும்புகுகவென்றல்மரபு.

2044. (ச) உற்ற - பொருந்திய; உண்ட.

2045. அடித்தியார்- தலைவியார்; "அடித்தி யெம்பெருமான்" பெருங். க: சஎ, உகூ.

2047. (ச) "தொட்டிமையுருவ நோக்கி" (1255) என்பதன் ஒப்புமைப் பகுதியைப் பார்க்க.

2050. (உ) அணைவூன்றி: (நைடத. கைக்கிளை. க.) (ரு) கையற்று. செயலற்று.

2052. (உ) செருக்கிய -மயங்கிய; "சொல்வகை செருக்கி" பெருங். க: ருரு, ககூஉ.

2055. (க - உ) "திருக்கிளர் மாடஞ் சேர்ந்து வலங்கொண்டு" பெருங். ரு: சா, சுகூ.

2061. (ச) "என்றின்னணிறை": கம்ப. மிதிலை: கசஎ.

2064. (உ) 2063: 4.

2065. (ரு) தடறு - ஆயுதவுறை.

2070. (க) "அகலிரு விசும்பிற் றுவலை கற்ப" (நெடுநல். உ0.) (க-உ) பூமாலைக்கு இந்திரவில்உவமை: "சிலைத்தார்மார்ப", "சிலைத்தாரகலம்" புறநா. க0, சுக.

2073. (உ) "பவளத்தூண்களும்" சூளா. சுயம். உஉஉ.

2074. (க) "மணிவரைச்சாரன் மஞ்ஞை" பெருங். ரு: கரு, ரு0.

2077. (க) "சிறுமுதுக்குறைவிக்குச் சிறுமையுஞ்செய்தேன்" (சிலப். கசு: ருஅ.) (ச): சூளா. சுயம்வர. உஎரு; கம்ப. கலன்காண். ரு.

2087. (ரு) அம்கம் - முறைமை; "அம்கஞ்சுருக்கேல்" ஆத்திச்சூடி.

2089. (ச) "மதியமு ஞாயிறுங் கதிதிரிந்தோடிக், கடனிறவிசும்பிறுடனின்றாங்கு" (பெருங். க. ருஉ, உஉ-ரு) என்னும் அடிகளையும் அவற்றின் குறிப்புரையையும் பார்க்க.

2093. (ரு) வேண்டுவது, தொகுத்தல்.

2097. (உரை) நாயனாரென்றது, நந்துக்கடனுடைய தந்தையை.

2103. (க) பூசலிட்டு - நொந்து.

2105. (ச) இறந்தார் - கடந்தார். கங்கைக்குத் தலைப்பில், 'கங்காகூடம்' என்று ஒரு சிறுமலையுண்டென்பர்.

2106. முல்லையுங் குறிஞ்சியுஞ்சேர்ந்த இடம் பாலையாதல், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்" (சிலப். கக: சுச - சு) என்பதனாலுமறியப்படும்.

2107. (க) "சிறியவன்செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (கலி. க0) என்பது இங்கே அறியற்பாலது. (உ) 'இன்கனித் தொண்டையங் துவர்வா, யரங்கக்கூத்திகள்' என்றார் முன்னும்; 1557. (ரு) கலைவலார் - பரத்தையர்; "எண்ணெண்கலையோ ரிருபெரு வீதியும்" (சிலப். கச: கசுஎ); "எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற, பண்ணியன் மடந்தையர்" (சிலப் உஉ: கருஅ-கூ); "கலைகளின் றுணிவும்" (மணி. உ: உகூ); "யாழ்முதலாக... கலையுறவகுத்த காமக்கேள்வி" பெருங். க: ருரு, அச - சு.

2108. (ரு) "துறைநனி கெழீஇக் கம்புளீனுந், தண்ணடை" புறநா. உசுஎ: எ - அ.

2110. (உரை) காரியப்பெயர்-காரியஸ்தர்; "காரியப்பே ரார்தட்டினூர் தட்டுவாராமல்" (தனிப்பாடல்.) அமிர்து - நுகர்பொருள்.

2124. (க) தொழுவனோர் - தொழுவார்.

2126. (ரு) சூளுறும் - சூளுறுவேம்; இச்சொல் 'சூளாறும்' எனவும் வழங்கும்; "சித்தநீயிலை யென்னெடு சூளறும்' (தே. சுந்தர. திருப்புனவாயில், க, ௪).

2136. (உ) மருமான் - உடன் பிறந்தாளுடைய மகன்.

2138. (க) பகைநரம்பு - யாழில் நின்ற நரம்பிற்கு ஆறாவது நரம்பும்

மூன்றுவதும் ; "நின்ற நரம்பிற் காறு மூன்றுஞ், சென்றுபெற நிற்பது கூடமாகும்" (சிலப். அ : ௩௩ - ச ; அடியார். மேற்). (ச) விலாவணை - அழுகை ; பிராகிருதம் ; பின்பு, அந்தப்புரவிலாவணை, கோயில்விலாவணை, நகரவிலாவணையென வருவனவற்றாலு மறிக.

2139. (உரை) ஏத்தாளிகள்-துதிப்போர் ; இவர் ஓவரெனப்படுவர் ; 1844.

2149. (௩) உமிழ -தோற்றுவிக்க.

2153. (உ) உதயம் - உதயகிரி ; 'உதயமென்னுமணிவரையுச்சி' இறை. சூ. ௩ - உரை.

2158. (உ) "வீணையோ டவைதுறைபோகி" (பெருங். க: ௩எ,கஎஅ.) பண்ணுறுத்து - பண்ணி.

2163. (ச) நிச்சம் - நித்தம்.

2165. (உ) ஆலுங்கடல் - முழங்கும் கடல் ; "மாறெழுந்தாலும்" புறநா. கஉஅ: ச.

2167. (ச) வெம்ப - கடுக.

2168. (௩) நிமித்தம் - புள்ளொழிந்தவை.

2177. (உரை)திரிபன்றியெய்தல் : 'அசுரமாவது, கொல்லேறுகோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியனசெய்துகோடல்" தொல். கள. சூ. க - ந.

2178. (உ) செற்றி - நெருங்கி.

2190. (௩) தென்னன் - பாண்டியன்.

2193. (ச) "மூவிரு மாண்கள் போய்" 2393.

2204. (க)இருதயில் அருதமாண் : "வில்முறிந்துபோயிற்று", "நாண் அற்றது" 2191, 2192.

2208. (க) ருபகாந்தயம்பு : இருபெயரொட்டு.

2211. (க) 'மீறுா் தோன்றலொடு' பெருங். ௩ : உசு, சுக.

2215. (க) பறந்தியல் தருக்கின : 'பறவைவிரும்பிடி' பெருங். க : சஅ, க௩௩.

2219.(உரை) சில எண்ணுப்பெயர்கள் - ஒருவகையான பேரெண்கள்.

2225. (௩) மறலும் - போர்செய்யும்; 908.

2230. (உ) "கூற்றொடுங் கொம்மை கொட்டிக் குனிக்கும்" நைடத. போர். 27.

2231. (உ) ஆக்கிய கயிறரிந்து : "வீங்குகோன் கயிறரீஇ" (மதுரை. ௩எசு.) (உரை) கோடுங் கோடுஞ் சந்தித்து: 2254 (க).

2236. (௩) ஆசு - கவசம்.

2242. (௩) படர் - நினைவு.(உரை) வலிக்கும் நாய் - இழுக்கும் நாய்.

2243. (ச) அரைசு - அரசு ; எதுகை. "அரைசெய்தி யிருந்தபயனெய்தினன்"; கம்ப. கையடை. கூ.

2247. (ச) செற்று - கோபித்து.

2250. (க) வெய்தா - விரைவாக.

2258. (க) கண்ணிமைத்தவர்களோடு வீரர் போர்செய்யார்; "குருதியொள்வாள் சுடரெழ விதிர்ப்ப நோக்கி, யிமைத்தலும் வளவர் கோனை வெருவனீ யேகு கென்றான்" (நைடத. போர். ௪௩) என்பதனாலுணர்க.

2259. (க - உ) நிராயுத பாணிகளோடு போர்செய்தல் குற்றம்;"உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிட்டார் பற்றேது மின்றி நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மனுகாரே, செவ்வகைச்சேவகர் சென்று" (சிறுபஞ்ச. சக) என்பதனால் விளங்கும். (உரை) மற்போர் எருமைமறமென்பது, புறநா, அ௦, உஎச - ஆம் பாடல்களின் பொருள் சுவாரஸ் விளங்கும்.

2261. (க) வீறு-வெற்றி ; யெலங்கென்று எண்ணி ஒருவீரன் யானையுடன் போர்செய்யவில்லை யென்பது, "தானால் விலங்காற் றனித்தாற் பிறன்

வரைத்தால், யானை யெறித விளிவர வால் - யானை, ஒருகையுடைய தெறி வலோ யானு, மிருகை சுமந்துவாழ் வேன்'' (தொல். புறத்திணை. சூ. ரு- ரு. மேற்) என்பதனாலும் விளங்குகின் றது.

2262. (உரை) பற்றுவன - போதி யன.

2263. (க) எரிய - விளங்க.

2265. (உ) ஊழ் - முறை.

2275. (உரை) கோளகை - யானை யின் தக்தப்பூண்; 83 - ஆம் கவியின் குறிப்பாலும் விளங்கும்.

2276. (உரை) கோடு புய்க்கலாது நின்ற - கொம்பை வாங்கமாட்டாமல் நின்ற ; " குத்திய மதயானை...கோடு புய்க்கல்லாதுழக்கு நாட கேள்'', " மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்தினுற், புகர்நுதல் புண்செய்த புய்கோடுபோல'' (கலி. ௩அ, ௫௩); " கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துழுத்து '' (மணி. கரு: சஎ) ; ''புய் ந்துகால் போகி'' (களவழி, ௩௯.) புய்த்தல், புயத்தலெனவும் வழங்கும்; ''புயக்க வொருமைந்தனைப் போவித் தார்'' கச்சி. வண்டு. உகரு.

2280. (உ) பட்டின் அங்கண்.

2283. (க) வீழா - வீழ்த்து ; பிற வினை. (உரை) கண்மாயம்-கண்கட்டு வித்தை: ''கண்டுங்கண்டிலே னென்ன கண்மாயமே '' திருவா. திருச்சதகம், சஉ.

2284. (உ) "மூயற்கூடு தாக்க விழற்கூடுடைய முடிச்சிலம்பா'' என் பர்.

2287. (உ - ச) "விழுக்கி மாய்ந்த மரத்தின், வாண்மிசைக் கிடந்த வாண் மையோன் றிறத்தே'', ''நெடுவேல் பாய்ந்த மார்பின், மடல்வன் போந் தையி னிற்கு மோர்க்கே'' (புறநா. உ௭௦, உ௯௭); "எய்போற் கிடந்தா னென் னேறு'' (பு - வெ. அ: உஉ.)

2289. (௫)வெள்வேல்: 2291: 1.

2294 (க) ஓலியல் - ஓலித்தல்.

2296. (க)கருவளி-பெருங்காற்று.

2302. கல்-வீரக்கல்; அஃதாவது, போரில் இறந்த வீரன்பொருட்டு அவ னுடைய உற்றார்முதலியோரால் அவ ன்பெயரும், பெருமையும் எழுதிநட் டுத் தெய்வமாகப்பாவித்து வழிபடப் பெற்ற கல்.

2303. (உ) தளிவம் - சின்னம்.

2305. (௩) தெற்றி - திண்ணை.

2308. (உ) தெழித்தல்-முழக்கல்.

2311. தாமரைமலரின் இதழ்வ கை இதிற் கூறப்பட்டிருத்தல்போலப் பின்குறிப்பிட்டுள்ள இடங்களிலும் ஒருவகையாகக் கூறப்பட்டிருத்தல் அறிதற் பாலது, பெரும்பாண். சoஉ- ரு; பரி. ப. களச: உ; பெருங். ௩: ௩, ௫௬ - கoக.

2314. (ச) நினைத்தல் செல்லார் - நினையார்; இமைத்தல் செல்லானென் பது இமையானென்னும் பொருளில் வந்திருத்தல் காண்க ; 2506.

2316. (க) கோல் - விளக்குத் தண்டு.

2324. (மு.) சச்சந்தனுக்குஉவமை கூறிய சூரியனைச் சீவகனுக்குங் கூறி யிருத்தல், தகப்பனே பிள்ளையாக வரு கின்றானென்னும் நூல்வழக்கைப்புலப் படுத்துகின்றது ; ''செங்நெலாலாய... தந்தையறிவு'' (நாலடி. ௩௬௭.) (ச) சீவகனுக்குச் சூரியனுவமை: 2336, 2371, 2523; பாரத. காண்டவ தகன. அ.

2326. (உரை) வீராபிஷேகம் - பகைவரைவென்ற வீரர்க்குச்செய்யப் படும் அபிஷேகம். இது விசயாபி ஷேகமெனவும் வழங்கும்; ''திரும கள் மருவிய செங்கோல் வேந்தன்'' என்னும் மெய்க்கீர்த்தியில், 'திசை யது நிகழ வீராபிஷேகம்பண்ணி' என வும், ''திருமாதர் புவியெனும் பெரு மாதர்'' என்னும் மெய்க்கீர்த்தியில், 'விசயாபிஷேகஞ் செய்து' எனவும்

